








# பாரதநாட்டுச்சரித்திரம்



E.M. கோபாலகிருஷ்ணக்கோன்
மதுரை சென்னை






3-ம் வகுப்பு

லை அணா 0-5-0

# Bharatha Nattu Charitram

## STANDARD III

Prepared in accordance with the New Syllabus for Elementary Schools

S. P. Govinda Chettiar, B.A.



E. M. GOPALAKRISHNA KONE

MADURAI :: :: MADRAS

 1952 *[Price As. 5.*

# நூன்முகம்

அரசியலார் விடுத்துள்ள ஆரம்பப் பாடசாலைப் பாடத் திட்டத்திற்கிணங்க இச் சிறுநூல் மூன்றாம் வகுப்புச் சிறுவர்களுக்கு எழுதப்பட்டிருக்கிறது. சிறுவர்களின் வயதிற்கும் அறிவிற்கும் ஏற்றவாறு எளிய இனிய நடையில் எழுதியிருப்பதால் இந்நூல் மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்பது என் துணிபு.

சிறுவர்கள் கதைகளைக் கேட்க விரும்புவது இயல்பு. எனவே, சிறு சிறு கதைகள் மூலம் நமது நாட்டின் சரித்திரம் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. படங்களும் ஏற்ற இடங்களில் சேர்க்கப்பட்டுள்ளன.

எனவே, இச் சிறுநூல், சிறுவர்களுக்கு வேண்டிய சரித்திர ஞானத்தை அளிக்கும் என்று நம்புகிறேன்.

S. P. கோவிந்த செட்டியார், பி. ஏ.

ஆசிரியர்.

# பொருளடக்கம்

# பாரத நாட்டுச் சரித்திரம்

## மூன்றும் வகுப்பு

### 1. இராமர்

முன்னொரு காலத்தில் தசரதர் என்ற ஒரு அரசர் இருந்தார். அவர் கோசல நாட்டை ஆண்டு வந்தார். அதன் தலைநகரம் அயோத்தி. தசரதருக்குக் கோசலை, கைகேயி, சுமத்திரை என்று மூன்று மனைவிகள். கோசலைக்கு இராமர் பிறந்தார், சுமத்திரை இலட்சுமணன், சத்துருக்கனன் என்ற இரண்டு புத்திரர்களைப் பெற்றாள். கைகேயிக்குப் பரதன் தோன்றினான்.

இந்தப் பிள்ளைகள் நால்வரிலும் இராமர் மூத்தவர். இராமர் தம் சகோதரரிடம் மிகவும் அன்பாக இருந்தார். இலட்சுமணனும், பரதனும், சத்துருக்கனனும் இராமரிடம் அன்பாக இருந்தார்கள். இவர்கள் நால்வரும் எல்லா வித்தைகளையும் நன்றாகக் கற்றுக்கொண்டார்கள்.

அக்காலத்தில் ஜனகர் என்ற ஒரு அரசர் இருந்தார். அவர் மிதிலை என்ற பட்டணத்தை ஆண்டு வந்தார். அவருக்குச் சீதை என்ற ஒரு

மகள் இருந்தாள். அவள் அழகும் நல்ல குண மும் உள்ளவள்.

ஜனகரிடம் ஒரு பெரிய வில் இருந்தது. அந்த வில்லை எடுத்து வளைப்பவருக்குச் சீதை யைக் கலியாணம் செய்து கொடுப்பதாக அவர் தெரி வித்து இருந்தார். பல அரசர்களும், அரச குமா ரர்களும் அந்த வில்லை வளைக்க வந்தார்கள். அவர் களால் அதை வளைக்க முடியவில்லை. ஆனால், இராமர் அந்த வில்லை எடுத்து வளைத்தார். அது ஒடிந்து விட்டது. உடனே ஜனகர் சீதையை இராமருக்குக் கலியாணம் செய்து கொடுத்தார்.

தசரதருக்கு வயதாகிவிட்டது. அதனால் அவர் இராமருக்குப் பட்டம் கட்ட முடிவு செய் தார். ஆனால் இது கைகேயிக்குப் பிடிக்கவில்லை. தசரதர் ஒரு சமயம் கைகேயிக்கு இரண்டு வரங்கள் கொடுப்பதாகச் சொன்னார். அந்த இரண்டு வரங் களை அவள் தசரதரிடம் கேட்டாள்; ஒன்று 'தன் மகன் பரதனுக்குப் பட்டம் கட்ட வேண்டும், மற் றொன்று இராமன் பதினான்கு வருடங்கள் காட் டிற்குப் போக வேண்டும்' என்று சொன்னாள். தசரதர் அதைக் கேட்டு வருத்தப்பட்டார். அவ ரால் அதை மறுக்க முடியவில்லை. இராமர் சந் தோஷத்துடன் காட்டிற்குச் சென்றார். அவரு டன் சீதையும், தம்பி இலட்சுமணனும் காட்டிற்



இராமர் வில்லை முறித்தல்

குச் சென்றார்கள். இவர்கள் காட்டிற்குச் சென்றதைத் தசரதர் கேள்விப்பட்டார். அவர் துக்கம் தாங்காமல் இறந்து போனார்.

இராமர் காட்டிற்குச் சென்ற சமயத்தில் பரதன் ஊரில் இல்லை; மாமன் வீட்டிற்குப் போயிருந்தான். பின்பு அயோத்திக்குத் திரும்பி வந்தான்; எல்லா விஷயங்களையும் அறிந்தான்; தன் தாயைக் கோபித்துக் கொண்டான்; தனக்கு நாடு வேண்டாம் என்று சொன்னான். உடனே அவன் காட்டிற்குப் போனான்; இராமரைத் தேடினான்; இராமரைக் கண்டான். ஆனால், இராமர் அயோத்திக்கு வர மறுத்துவிட்டார். இராமர் தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமச் சடங்குகளைக் காட்டிலேயே செய்துமுடித்தார்.

பரதன் இராமரின் பாதுகைகளை வாங்கிக் கொண்டு, அயோத்திக்குத் திரும்பினான். இராமருக்குப் பதிலாக பரதன் அயோத்தியை ஆண்டு வந்தான்.

கேள்விகள்

1. தசரதர் யார்? அவருக்கு எத்தனை மனைவிகள்?
2. தசரதருடைய குமாரர்கள் பெயர் என்ன?
3. பரதன் யாருடைய மகன்?
4. இராமர் ஏன் காட்டிற்குப் போனார்?
5. பரதன் உத்தமன் என்பதை எதனால் அறியலாம்?

## 2. இராமர் காட்டில் வசித்தல்

இராமர், இலட்சுமணருடனும் சீதையுடனும் காட்டில் பல இடங்களுக்குச் சென்றார். முடிவில் ஒரு குடிசை அமைத்து அதில் அவர்கள் வசித்து வந்தார்கள். ஒரு நாள் இராமரும் இலட்சுமணரும் இல்லாத வேளையில் இராவணன் என்ற அரக்கன் சந்நியாசி உருவத்தில் அங்கு வந்தான்; சீதையைத் தூக்கிக்கொண்டு இலங்கைக்குப் போய்விட்டான்.

வெளியே சென்றிருந்த இராமரும் இலட்சுமணரும் திரும்பி வந்தார்கள். சீதையைக் காணவில்லை. அவர்கள் சீதையைப் பல இடங்களிலும் தேடினார்கள்; வழியில் ஜடாயு என்ற கழுகைப் பார்த்தார்கள். அது 'இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றான்' என்று சொல்லிற்று. வழியில் வானர அரசன் சுக்கிரீவனும், அவனுடைய மந்திரி அனுமானும் இராமருக்கு நண்பர் ஆனார்கள். அனுமான் இலங்கைக்குச் சென்றான்; சீதையைக் கண்டான்; சீதையுடன் பேசிவிட்டுத் திரும்பினான்; இராமரிடம் வந்து சீதையைத் தான் கண்டதாகச் சொன்னான்.

இராமர் ஒரு பெரிய வானரச் சேனையோடு இலங்கைக்குச் சென்றார்; இராவணனோடு சண்டை செய்தார்; இராவணனைக்கொன்றார். சீதையை



இராவணன் சந்நியாசி உருவத்தில் சீதையைச் சந்தித்தல்

மீட்டுக்கொண்டு அயோத்திக்குத் திரும்பினர். இதற்குள் பதினான்கு வருடங்கள் கழிந்தன.

பிறகு ஒரு நல்ல நாளில் இராமருக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. அயோத்தி மக்கள் சந்தோஷமடைந்தார்கள். இராமர் அரசர்களுக்கு எல்லாம் அரசர் ஆனார்; நீதியாக ஆண்டு வந்தார். இராமருடைய கதைக்கு இராமாயணம் என்று பெயர்.

இராமர் தந்தை சொல்லைத் தட்டாதவர். நற்குணம் உள்ளவர்; சிறந்த வீரர். அவர் எல்லோரிடமும் அன்பாக இருந்தார்.

கேள்விகள்

1. இராவணன் யார்? அவன் செய்த கொடுமையாது?

2. இராமர் யாருடைய உதவியால் சீதை இருக்கும் இடத்தை அறிந்தார்?

3. இராமர் சீதையை எவ்வாறு மீட்டார்?

4. இராமர் கதையிலிருந்து நீங்கள் என்ன தெரிந்து கொண்டீர்கள்?

---

## 3. பாண்டவர்கள்

வெகு காலத்திற்கு முன் அஸ்தினாபுரி என்ற நகரைத் திருதராட்டிரன், பாண்டு என்ற இருசகோதரர்கள் ஆண்டு வந்தனர். திருதராட்டிரன் மூத்தவன்; பாண்டு இளையவன். திருதராட்டிரனுக்கு

நூறு பிள்ளைகள். மூத்தவன் துரியோதனன். அவர்களுக்குக் கௌரவர்கள் என்று பெயர்.

பாண்டுவுக்குத் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்ற ஐந்து பிள்ளைகள். அவர்களுக்குப் பாண்டவர்கள் என்று பெயர். அவர்களில் மூத்தவன் தருமன். பாண்டவர்கள் சிறுவராக இருக்கும்போதே பாண்டு இறந்துவிட்டான். அதனால் திருதராட்டிரன் அவர்களைப் பாதுகாத்துவந்தான். பாண்டவர்கள் மிகவும் நல்லவர்கள்; எல்லா வித்தைகளும் கற்றவர்கள்.

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் துரோணர் வில்வித்தை கற்றுக்கொடுத்தார். பாண்டவர்கள் வில்வித்தையில் தேர்ச்சிபெற்றார்கள். வில்வித்தையில் அர்ச்சுனனுக்குச் சமமானவர்கள் அக்காலத்தில் ஒருவரும் இல்லை. அதனால் கௌரவர்கள் பாண்டவர்கள்மீது பொறாமை கொண்டனர். திருதராட்டிரன் பாண்டவர்களுக்குத் தமது இராஜ்யத்தில் பாதி பிரித்துக் கொடுத்தார். அவர்கள் இந்திரப் பிரஸ்தம் என்ற நகரை ஏற்படுத்திக் கொண்டு, தங்கள் நாட்டை ஆண்டுவந்தார்கள்.

துரியோதனன் பாண்டவர்களைக் கொல்ல பல விதச் சூழ்ச்சிகள் செய்தான். ஒருநாள் அவன் தருமரைச் சொக்கட்டான் ஆட அழைத்தான்.

அதில் தருமர் தோற்ருர்; அவருடைய நாடு நகரங் களை இழந்தார். துரியோதனன் தருமரைப் பார்த்து ‘ நீங்கள் பன்னிரண்டு வருடம் வனவாசம் செய்யவேண்டும். ஒருவருடம் ஒருவருக்கும் தெரி யாமல் மறைந்து வசிக்கவேண்டும். பிறகு நீங்கள் திரும்பிவந்தால் உங்கள் நாட்டைத் திரும்பக் கொ டுப்பேன் ’ என்ருன். பாண்டவர்கள் அதற்குச் சம்மதித்தனர்.

பாண்டவர்கள் காட்டில் வசித்தனர். துரி யோதனன் அவர்களைக் கொல்லப் பல வழிகள் தேடினுன். ஒன்றும் பயன்படவில்லை. பாண்டவர் கள் பதின்மூன்று வருடங்களையும் கழித்தார்கள்; பின்பு நாட்டுக்குத் திரும்பினுர்கள். துரியோதன னிடம் ஸ்ரீகிருஷ்ணபகவானை தூது அனுப்பி, தங்கள் நாட்டைக் கொடுக்கும்படிக் கேட்டார்கள். துரியோதனன் அவர்களுக்கு ஐந்து வீடுகளும் கொடுக்க மறுத்துவிட்டான்.

அதனுல் கௌரவர்களுக்கும் பாண்டவர் களுக்கும் 18-நாட்கள் சண்டை நடந்தது. அந்தச் சண்டைக்குப் பாரத யுத்தம் என்று பெயர். ஸ்ரீ கிருஷ்ணபகவான் பாண்டவர்களுக்கு உதவி செய்தார். யுத்தத்தில் கௌரவர்கள் மாண்டார் கள். பாண்டவர்கள் ஜயித்தார்கள். தருமர் அரசர் ஆனுர்; நீதியாக நாட்டை ஆண்டார்.

பாண்டவர்களைப் பற்றியும் கௌரவர்களைப் பற்றியும் சொல்லும் கதைக்குப் பாரதக் கதை என்று பெயர்.

கேள்விகள்

1. பாண்டவர்கள் யார்? அவர்கள் பெயர்களைச் சொல்லு.

2. கௌரவர்கள் ஏன் பாண்டவர்கள்மீது பொறாமை கொண்டார்கள்?

3. தருமர் யாருடன் சொக்கட்டான் ஆடினார்? அதனால் ஏற்பட்ட தீமை என்ன?

4. 'பாரத யுத்தம்' ஏன் நடந்தது? அதன் முடிவு என்ன?

---

## 4. அரிச்சந்திரன்

முன்னொரு காலத்தில் அரிச்சந்திரன் என்னும் ஒரு அரசன் இருந்தான். அவன் கோசல நாட்டை ஆண்டுவந்தான். அவன் எப்பொழுதும் உண்மையே பேசுவான். பொய் பேசவே மாட்டான். அதனால் அவன் புகழ் எங்கும் பரவிற்று.

ஒரு நாள் தேவலோகத்தில் இந்திரன் 'உலகில் சத்தியம் தவறாதவர்கள் உண்டா?' என்று கேட்டார். வசிஷ்டர், 'அரிச்சந்திரன் சத்தியம் தவறாதவன்' என்றார். விசுவாமித்திரர் அரிச்சந்திரனைப் பொய்யனாகச் செய்வதாகக் கூறினார்.

தம் சொல்லை நிறை வேற்றுவதற்காக விசுவா மித்திரர் அரிச்சந்திரனைச் சோதிக்க ஆசைகொண் டார். அவர் அரசனிடம் வந்து, ‘ அரசே ! நான் ஒரு யாகம் செய்யப் போகிறேன். அதற்கு அதிகப் பணம் வேண்டும்’ என்று சொன்னார். அரசன் பணம் கொடுப்பதாக ஒப்புக்கொண்டான். விசுவா மித்திரர் அரசரிடம் தமக்கு வேண்டும் போது பணம் வாங்கிக் கொள்வதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

ஒரு நாள் விசுவாமித்திரர் அரிச்சந்திரனிடம் வந்தார். அவனுடைய நாட்டைத் தந்திரம் செய்து வாங்கிக் கொண்டார். பிறகு யாகத்திற்குக் கொடுப்பதாகச் சொன்ன பொருளைக் கேட்டார். அரசரிடம் பணம் இல்லை; ஆயினும் எப்படியா வது கொடுப்பதாக அவர் சொன்னார். விசுவாமித் திரர் அதற்குச் சம்மதித்தார்.

அரிச்சந்திரன் விசுவாமித்திரருக்குப் பணம் கொடுக்கத் தம் மனைவியுடனும், மகன் லோகிதாச னோடும் காசி நகருக்குச் சென்றார். அங்கே தமது மனைவியையும் மகனையும் ஒரு பிராமணனுக்கு விற் றார்; தாம் ஒரு புலையனுக்கு அடிமையானார்; பணத்தை வாங்கி விசுவாமித்திரருக்குக் கொடுத் தார். சந்திரமதியும் லோகிதாசனும் கஷ்டமான

வேலைகள் செய்து வந்தார்கள். அரிச்சந்திரனை சுடு காட்டைக் காத்துவரும்படி புலையன் சொன்னான்.

ஒரு நாள் லோகிதாசன் தர்ப்பை கொண்டு வரக் காட்டிற்குச் சென்றான். அங்கே அவன் பாம்பு கடித்து இறந்தான். சந்திரமதி மகனைத் தேடிச் சென்றாள்; மகன் இறந்து கிடப்பதைக் கண்டாள்; அழுது புலம்பினாள். இறந்த மகனை எடுத்துக் கொண்டு அவள் சுடுகாட்டிற்குப்போனாள்; அங்கே பிணத்தை எரிக்கத் தொடங்கினாள். அரிச்சந்திரன் அங்கே வந்தான்; மகன் இறந்ததைப் பார்த்து வருந்தினான். பிணஞ் சுடுவதற்குக் கூலிப் பணம் கொடுக்கும்படி அவன் சந்திரமதியைக் கேட்டான். சந்திரமதி பிராமணனிடம் அதை வாங்கி வருவதற்குச் சென்றாள்.



சந்திரமதி மயானத்தில் புலம்பல்

வழியில் ஒரு குழந்தை இறந்து கிடந்தது. அது காசி அரசனுடைய குழந்தை. சந்திரமதி அக் குழந்தையைப் பார்த்தாள். அதற்குள் அரசனுடைய காவலாளிகள் அங்கு வந்தார்கள். அக் குழந்தையைக் கொன்றவள் சந்திரமதி என்று அவர்கள் நினைத்தார்கள்; அரசனிடம் சொன்னார்கள். அரசன் சந்திரமதியைக் கொல்லும்படி உத்திரவு இட்டான். காவலாளிகள் அவளை அரிச்சந்திரனிடம் அழைத்து வந்தார்கள். அரிச்சந்திரன் மனங்கலங்கினான்; அரசன் கட்டளைப்படி அவளை வெட்டினான்; அந்த வாள் அவளுடைய கழுத்தில் ஒரு பூமாலையாக விழுந்தது. பிறகு லோகிதாசனும் காசிராஜன் மகனும் உயிர் பெற்று எழுந்தார்கள். ஆகாயத்தில் பூமாரி பெய்தது.

உடனே விசுவாமித்திரர் அங்கே வந்தார். அரிச்சந்திரனைச் சோதிக்கவே இவ்வாறெல்லாம் தாம் செய்ததாகத் தெரிவித்தார்; அரிச்சந்திரனுக்கு அவருடைய நாட்டைத் திருப்பிக் கொடுத்தார். அரிச்சந்திரன் மனைவியுடனும் மகனுடனும் அயோத்திக்குப் போனார்; தமது நாட்டை நீதி தவறாமல் ஆண்டு வந்தார்.

பிள்ளைகளே! நீங்களும் அரிச்சந்திரனைப் போல் உண்மையே பேசவேண்டும்.

கேள்விகள்

1. அரிச்சந்திரன் எந்த நாட்டு அரசன்?

2. விசுவாமித்திரர் அரிச்சந்திரனிடம் என்ன கேட்டார்? ஏன்?

3. அரிச்சந்திரன் தன் மனைவியை ஏன் வெட்டினான்?

4. அப்பொழுது என்ன நடந்தது?

5. இக்கதையால் நீங்கள் என்ன தெரிந்துகொள்கிறீர்கள்?

---

## 5. சிபிச் சக்கரவர்த்தி

வெகு காலத்துக்கு முன்பு நமது நாட்டில் சிபி என்ற சக்கரவர்த்தி ஒருவர் இருந்தார். அவர் இரக்கம் உள்ளவர்.

ஒரு நாள் சிபி அரண்மனையில் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது திடீரென்று ஒரு புறா பறந்து வந்து அவர் மடியில் விழுந்தது. அது சிபியிடம் தன்னைக் காப்பாற்றுமாறு கேட்டுக்கொண்டது. சிபியும் அதற்கு இணங்கினார்.



சிபிச் சக்கரவர்த்தி

அதற்குள் ஒரு பருந்து அங்கே வந்தது. அது சிபியைப் பார்த்து, 'அரசே! இந்

தப் புரு எனக்கு இரை. இதை என்னிடம் கொடுத்துவிடும்' என்று கேட்டது. அரசர், 'இது என்னிடம் அடைக்கலம் அடைந்து இருக்கிறது. இதைக் கொடுக்க முடியாது. புருவிற்குப் பதில் வேறு எதையாகிலும் கேள், தருகிறேன்' என்ருர். பருந்து 'ஐயா! புருவின் எடைக்குச் சமமான மாமிசத்தை உமது உடம்பிலிருந்து அறுத்துக் கொடும்' என்றது. சிபி அதற்கு ஒப்புக்கொண்டார்.

உடனே தராசு கொண்டுவரப்பட்டது. அரசர் ஒரு தட்டில் புருவை வைத்தார். மற்ருெரு தட்டில் தம் உடலிலிருந்து மாமிசத்தை அறுத்து வைத்தார். புருவின் எடை அதிகமாயிருந்தது. அதனுல் அரசர் பல முறை தம் உடலிலுள்ள மாமிசத்தை அறுத்து அறுத்து வைத்தார். எவ்வளவு வைத்த போதிலும் எடை குறைவாகவே இருந்தது. முடிவில் அவர் தாமே அந்தத் தட்டில் ஏறி உட்கார்ந்தார். அப்பொழுதுதான் புருவின் எடையும் அரசருடைய தட்டும் சமமாக நின்றன. உடனே புருவும் பருந்தும் மறைந்தன.

சிபியின் குணத்தைச் சோதிப்பதற்காகவே அக்கினிபகவான் புருவாகவும், இந்திரன் பருந்தாகவும் வந்தார்கள். அவர்கள் சிபிக்குப் பல

வரங்களைக் கொடுத்தார்கள். சிபியின் உடல் முன் போல் ஆயிற்று. அவர் புகழ் நாடெங்கும் பரவிற்று.

பிள்ளைகளே! நீங்களும் சிபியைப் போல் எல்லாப் பிராணிகளிடத்தும் அன்புள்ளவர்களாக இருக்க வேண்டும்,

கேள்விகள்

1. சிபியின் குணம் என்ன ?
2. சிபியினிடம் அடைக்கலம் அடைந்தது யார் ?
3. அவர் புறுவை எவ்வாறு காப்பாற்றினர் ?
4. புறுவாகவும் பருந்தாகவும் வந்தவர்கள் யார் ?

---

## 6. புத்தர்

வட இந்தியாவில் கபிலவாஸ்து என்னும் நகரில் வெகு காலத்துக்கு முன்பு சுத்தோதனர் என்ற அரசர் ஆண்டு வந்தார். அவர் மனைவியின் பெயர் மாயாதேவி. அவர்களுக்குப் பல வருடம் கழித்து ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்குச் சித்தார்த்தர் என்று பெயரிட்டனர். குழந்தை பிறந்த சில நாட்களில் தாயார் இறந்து விட்டாள். ஆகையால் தந்தையே அக் குழந்தையை அன்போடு வளர்த்துவந்தார்.

சித்தார்த்தர் இளமையிலேயே பல கலைகளையும் கற்றார். அரசர் அவருக்குத் தக்க வயதில்

யசோதரை என்ற பெண்ணைக் கலியாணம் செய்துவைத்தார் ; சித்தார்த்தருக்குத் தனியாக ஒரு மாளிகையையும் கொடுத்தார். அந்த மாளிகையில் அவரும் அவரது மனைவி யசோதரையும் வசித்து வந்தார்கள். அவர்களுக்கு இராகுலன் என்னும் ஓர் ஆண்குழந்தை பிறந்தது.

'உலக வாழ்க்கை துன்பம் நிறைந்தது' என்று சித்தார்த்தர் அறிந்தார். மக்கள் நோயாலும், கிழத்தனத்தாலும் கஷ்டப்படுவதை அவர் கண்டார்; முடிவில் மக்கள் இறந்தே போகவேண்டும் என்பதை உணர்ந்தார்; மக்கள் படும் துன்பங்களைப் போக்க வழிதேட நினைத்தார்.

ஒருநாள் அவர் தம் மனைவியையும் குழந்தையையும் விட்டுப் பிரிந்து காட்டிற்குப் போனார்; அவ்விடம் இருந்த தபசிகளிடம் உபதேசம் கேட்டார். அவரது மனம் சமாதானம் அடையவில்லை.


புத்தர்

பிறகு அவர் கயை என்னும் ஊருக்குப் போனார்; அங்கே ஓர் அரச மரத்தடியில் உட்கார்ந்து தவம் செய்தார்; அப்பொழுது அவருக்கு

ஞானம் உண்டாயிற்று. அது முதல் அவருக்குப் புத்தர் என்ற பெயர் ஏற்பட்டது. புத்தர் என்றால் ஞானி என்றும், 'உண்மையை அறிந்தவர்' என்றும் அர்த்தம்.

புத்தர் ஏற்படுத்திய மதத்திற்குப் பௌத்த மதம் என்று பெயர். புத்தர் ஊர் ஊராகச் சென்றார்; தமது மதத்தைப் பரவச் செய்தார். 'ஆசையை ஒழிக்க வேண்டும், எல்லோரிடமும் அன்பாக இருக்க வேண்டும், பிராணிகளைக் கொல்லக் கூடாது' என்று அவர் போதித்தார். ஆயிரக் கணக்கான மக்கள் அவரது மதத்தில் சேர்ந்தார்கள். சில மன்னர்களும் பௌத்த மதத்தை ஆதரித்தார்கள். புத்தர் அவரது எண்பதாவது வயதில் காலமானார்.

## கேள்விகள்

1. சித்தார்த்தர் என்பவர் யார்?

2. 'உலகவாழ்க்கை துன்பம் நிறைந்தது' என்பதை அவர் எப்படி அறிந்தார்?

3. சித்தார்த்தருக்குப் புத்தர் என்று பெயர் எப்பொழுது, ஏன் ஏற்பட்டது?

4. புத்தர் ஜனங்களுக்குப் போதித்தது என்ன?

---

## 7. அசோகர்

அசோகர் மகத நாட்டின் அரசர். அந்த நாடு வட இந்தியாவில் இருந்தது. பாடலீபுத்திரம் அதன் முக்கிய பட்டணம். அசோகர் பல நாடுகளை ஜயித்தார்; தம் இராஜ்யத்தைப் பெரிதாக்கினார். அவர் சிறந்த போர் வீரர்.

அவர் ஒரு சமயம் கலிங்க நாட்டின்மீது படையெடுத்தார். அந்தச் சண்டையில் அசோகர் ஜயம் அடைந்தார். ஆனால் ஆயிரக் கணக்கான மக்கள் மாண்டனர். இரத்தம் ஆறுபோல ஓடிற்று. இவைகளைக் கண்டு அசோகர் மனங் கலங்கினார்; 'இனிமேல் ஒருவரோடும் சண்டை செய்வதில்லை' என்று தீர்மானித்தார். அதன் படியே அவர் யுத்தம் செய்யவில்லை.

பிறகு அசோகர் பௌத்த மதத்தில் சேர்ந்தார்; ஒரு புத்த சந்நியாசிபோல வாழ்ந்தார். அவர் வேட்டையாடுவதை நிறுத்திவிட்டார்; மாமிசம் புசிப்பதையும் நீக்கிவிட்டார். பௌத்த மதத்தை அவர் பரவச்செய்தார். கல் தூண்களிலும், பாறைகளிலும் புத்தரது உபதேசங்களைச் செதுக்கி வைத்தார்; பௌத்தமதச் சந்நியாசிகளைப் பல இடங்களுக்கும் அனுப்பிப் புத்தரது உபதேசங்

களை மக்களுக்குப் போதிக்கும்படி செய்தார். அவர் செதுக்கிய கல் தூண்களையும், பாறைகளையும் இன்றைக்கும் பல இடங்களில் காணலாம்.


அசோகரின் கல்தூண்

அசோகர் பல நன்மைகளைச் செய்தார். அவர் பல சாலைகளை ஏற்படுத்தினர்; அவைகளின் ஓரங்களில் நிழல் தரும் மரங்களை வைத்தார்; பல கிணறுகளை வெட்டினர்; சத்திரங்களைக் கட்டினர்; வைத்திய சாலைகளை ஏற்படுத்தினர். மிருக வைத்திய சாலைகளும் அவர் காலத்தில் இருந்தன.

அசோகர் காலத்தில் மக்கள் சுகமாக வாழ்ந்தனர். அதனல் அவருக்கு மகா அசோகர் என்ற பெயர் உண்டாயிற்று. சுதந்திரம் பெற்ற இப்

பொழுது நமது நாட்டுக் கொடியில் அசோகச் சக்கரம் எழுதப்பட்டிருக்கிறது. நாணயங்களி லும் தபால் பில்லைகளிலும் அசோகரது ஸ்தூபி யின் சிங்க உருவங்கள் இருப்பதைக் காணலாம்.

கேள்விகள்

1. அசோகர் கலிங்கப்போருக்குப் பிறகு சண்டை செய்யவில்லை. ஏன்?

2. அவர் பௌத்த மதத்தை எவ்விதம் பரவச் செய் தார்?

3. அசோகர் மக்களுக்குச் செய்த நன்மைகள் என்ன?

---

## 8. இராணி சம்யுக்தை

சுமார் 800 வருடங்களுக்கு முன் வட இந் தியாவில் இரண்டு பெரிய இராஜபுத்திர இராஜ்யங் கள் இருந்தன. அவை கன்னோசி, ஆஜ்மீர் என்பன. ஆஜ்மீர் நாட்டுக்கு மன்னன் பிருதிவி ராஜர். கன்னோசி நாட்டுக்கு அரசன் ஜயசந்தி ரர். இவர்கள் இருவரும் உறவினர்கள். ஆனால், இருவரிடையேயும் பொறாமை உண்டாயிற்று.

ஜயசந்திரருக்குச் சம்யுக்தை என்ற அழகிய மகள் இருந்தாள். அவள் நல்ல குணம் உள்ளவள். பிருதிவி ராஜன் அவளையே மணக்க உறுதிசெய்து

கொண்டார். ஆனால் ஜயசந்திரருக்கு அது விருப்பம் இல்லை.

அந்தக் காலத்தில் பெண்கள் தாங்களே கணவரைத் தேடிக் கலியாணம் செய்துகொள்ளும் வழக்கம் உண்டு. அந்த வழக்கத்துக்குச் சுயம் வரம் என்று பெயர். ஜயசந்திரர் சம்யுக்தையின் சுயம்வரத்தை ஏற்படுத்தினார்; பல அரசர்களுக்கும் கடிதங்கள் அனுப்பினார். ஆனால் பிருதிவி ராஜருக்கு அனுப்பவில்லை. அவரை அவமானப்படுத்த எண்ணினார்; அவரைப் போல ஒரு மண் பொம்மை செய்து, சுயம்வர மண்டபத்தின் வாசலில் நிறுத்தினார். பிருதிவிக்கு இது தெரிந்தது.

சுயம்வர நாள் வந்தது. அரச குமாரர்கள் மண்டபத்தில் கூடி இருந்தார்கள். பிருதிவி மாறு வேடத்துடன் வந்திருந்தார். சம்யுக்தை தன் கையில் பூமாலையுடன் மண்டபத்திற்குள் வந்தாள்; எல்லா அரசர்களையும் பார்த்தாள்; ஒருவருக்கும் மாலை போடவில்லை; பிருதிவி ராஜரைத் தேடினாள்; கடைசியில் வாசலில் நிறுத்தி இருந்த உருவச்சிலையின் கழுத்தில் மாலையைப் போட்டாள்.

மாறுவேடத்துடன் வந்திருந்த பிருதிவி ராஜர் வெளியே வந்தார்; உடனே சம்யுக்தை

யைத் தூக்கித் தம் குதிரையின்மீது வைத்துக்



பிருதிவி சம்யுக்தையைத் தூக்கிச் செல்லல்

கொண்டு வேகமாக டில்லிக்குப் போனார். டில்லி யில் இருவருக்கும் கலியாணம் நடந்தது.

ஜயசந்திரர் பிருதிவி ராஜரை ஒழிக்கத் தீர் மானித்தார். அச் சமயம் முகமதுகோரி என்பவர் ஒரு பெரிய சேனையோடு இந்தியாவிற்கு வந்தார். அவர் ஆப்கானிஸ்தானம் என்னும் நாட்டிற்கு மன்னர். ஜயசந்திரர் முகமதுகோரிக்கு உதவி செய்தார்; பிருதிவியோடு சண்டை செய்யும்படி அவரைத் தூண்டினார்.

கோரிக்கும் பிருதிவி ராஜருக்கும் சண்டை நடந்தது. பிருதிவி சண்டையில் இறந்தார். சம்யுக்தை தீயில் விழுந்து மாண்டாள். டில்லி முகமதுகோரி வசம் ஆயிற்று. சில நாட்கள் கழித்து முகமது ஜயசந்திரருடனும் போர் தொடுத்தார். ஜயசந்திரர் கொல்லப்பட்டார். முகமது, கன்னோசி நாட்டையும் தம் இராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டார்.

ஜயசந்திரர் பிருதிவி ராஜரிடம் பகை கொண்டார்; மாற்றானுக்கு இடம் கொடுத்தார். அதனால் பிருதிவியும் பின்னர் ஜயசந்திரரும் மாண்டார்கள். ஆகையால் நாம் பொறாமை கொள்ளக்கூடாது. மாற்றானுக்கு இடம் கொடுக்கக்கூடாது.

கேள்விகள்

1. பிருதிவி எந்த நாட்டு மன்னர்?
2. ஜயசந்திரர் யார்?
3. 'சுயம் வரம்' என்றால் என்ன?
4. முகமது கோரிக்கு உதவியது யார்? ஏன்?
5. அதனால் என்ன ஏற்பட்டது?
6. இக் கதையால் நீ அறிந்து கொள்ளும் நீதி என்ன?

---

## 9. சித்தூர் இராணி—பத்மினி

வட இந்தியாவில் மீவார் என்று ஒரு இராஜ்யம் இருந்தது. அதன் தலைநகர் சித்தூர். ஒரு

காலத்தில் அந்த மீவார் நாட்டை பீம்சிங் என்ற அரசர் ஆண்டுவந்தார். அவர் இராஜபுத்திர வகுப்பைச் சேர்ந்தவர். அவர் மனைவியின் பெயர் பத்மினி. அவள் மிகவும் அழகு உள்ளவள்.

அந்தக் காலத்தில் டில்லிநகரை அலாவுதீன் என்ற அரசர் ஆண்டுவந்தார். அவர் பல நாடுகளை ஜயிக்க விரும்பினர். அவர் பத்மினியின் அழகைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தார்; அவளைக் கலியாணம் செய்துகொள்ள ஆசைப்பட்டார். அதனல் அலாவுதீன் பெரிய சேனையோடு சித்தூரை முற்றுகையிட்டார்.

இராஜபுத்திர வீரர்கள் கடுமையாகப் போர் செய்தனர். அலாவுதீன் கோட்டைக்குள் போக முடியவில்லை. அவர் பத்மினியின் உருவத்தைப் பார்த்துவிட்டுப் போவதாகச் சொன்னர். பத்மினி அலாவுதீனை அழைத்து வருமாறு பீம்சிங்கிடம் சொன்னள். அலாவுதீன் நிலைக்கண்ணுடியில் பத்மினியின் உருவத்தைக் கண்டார். அலாவுதீனை வழியனுப்பப் பீம்சிங் கோட்டைவாசல்வரை சென்ருர். அப்பொழுது அலாவுதீன் ஆட்கள் பீம்சிங்கைச் சிறைசெய்தனர்.

அலாவுதீன் தம்மைப் பத்மினி மணந்துகொள்ளாவிட்டால் தாம் பீம்சிங்கைக் கொலை செய்து விடுவதாகப் பயமுறுத்தினர். பத்மினி

புத்தி கூர்மை உடையவள். அவள் தன் கணவனை மீட்பதற்கு ஓர் உபாயம் செய்தாள்; அலாவுதீனைக் கலியாணம் செய்துகொள்வதற்காகத் தான் 700 தாதிகளுடன் வருவதாகத் தெரிவித்தாள். 700 மூடு பல்லக்குகள் தயாரிக்கப்பட்டன. ஒவ்வொரு பல்லக்கிலும் ஒவ்வொரு வீரனைப் பெண் வேடத்தோடு உட்காரச் செய்தாள்; வேண்டிய ஆயுதங்களையும் அவர்களிடம் கொடுத்தாள்; தானும் ஒரு பல்லக்கில் உட்கார்ந்துகொண்டாள். பெண் வேடம் கொண்ட வீரர் பல்லக்குகளைத் தூக்கிச் சென்றார்கள்.

பத்மினி அலாவுதீனைக் கண்டாள்; பீம்சிங்கைத் தான் கடைசிமுறையாகப் பார்த்துவிட்டு வருவதாகத் தெரிவித்தாள். அலாவுதீன் அதற்குச் சம்மதித்தார். உடனே 700 பல்லக்குகளும் பீம்சிங் இருக்கும் சிறையை அடைந்தன. பல்லக்கிலிருந்த வீரர்கள் வெளியே வந்தார்கள். அவர்கள் உதவியால் பீம்சிங் ஓடி விட்டார். அலாவுதீன் வருத்தத்தோடு டில்லிக்குப் போனார்.

அவர் மறுபடியும் சித்தூரை அழித்துவிடுவதாகப் போருக்கு வந்தார். சண்டை பலமாக நடந்தது. பீம்சிங் போரில் மாண்டார். பத்மினியும் மற்ற இராஜபுத்திரப் பெண்களும் தீ வளர்த்து அதில் வீழ்ந்து இறந்தார்கள். அலாவுதீன் திரும்பி டில்லிக்குப் போய்விட்டார்.

### கேள்விகள்

1. பத்மினி யார் மனைவி ?
2. அலாவுதீன் ஏன் சித்தூரை முற்றுகையிட்டார் ?
3. பீம்சிங் ஏன் கைது செய்யப்பட்டார் ?
4. பத்மினி பீம்சிங்கை எவ்வாறு மீட்டாள் ?
5. பத்மினி, பீம்சிங் இவர்கள் முடிவு என்ன ?

---

## 10. பாபர்

சுமார் 500 வருடங்களுக்கு முன் பாபர் என்ற அரசர் டில்லியை ஆண்டுவந்தார். அவர் ஒரு முஸ்லிம் மன்னர். அவர் மிகவும் நல்லவர்; நன்ருகப் படித்தவர். அவர் தம் குடிகளிடம் அதிக அன்புள்ளவர். குதிரைச்சவாரி செய்வதிலும் நீந்துவதிலும் அவருக்கு அதிகவிருப்பம்.


பாபர்

ஒரு நாள் பாபர் மாறுவேடத்துடன் டில்லி நகரின் தெரு ஒன்றில் போய்க்கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு பெரிய யானை ஓடிவந்தது. அதைப் பார்த்து மக்கள் பயந்து ஓடினர்கள். அப்பொழுது

ஒரு சிறு குழந்தை தவறி விழுந்து விட்டது. இன்னும் சற்று நேரத்தில் குழந்தை யானையின் கால்களில் அகப்பட்டு நசுங்கிவிடும். அச்சமயம் ஒருவர் திடீரெனப் பாய்ந்து வந்து, அக் குழந்தையைத் தூக்கிக் காப்பாற்றினர். அவ்விதம் அந்தக் குழந்தையைக் காப்பாற்றியது யார்? அவர் தான் பாபர் சக்கரவர்த்தி. குழந்தையைக் காப்பாற்றத் தமக்கு வரும் ஆபத்தை அவர் எண்ணவில்லை அல்லவா?

பாபருக்கு ஒரு குமாரர் இருந்தார். அவர் பெயர் ஹுமாயூன். ஒரு சமயம் ஹுமாயூனுக்கு வியாதி உண்டாயிற்று. வைத்தியர்கள் பலர் சிகிச்சை செய்தார்கள்; 'ஒன்றும் பயன்பட வில்லை. ஹுமாயூன் பிழைப்பது கஷ்டம்' என்று சொல்லி விட்டார்கள். பாபர் மிகவும் துக்கப்பட்டார். அப் பொழுது ஒரு சந்நியாசி வந்தார். அவர் பாபரைப் பார்த்து, 'நீர் விரும்பும் அருமையான ஒரு பொருளைக் கடவுளுக்குக் கொடுத்தால் உமது மகன் பிழைப்பான்' என்றார். பாபர் சிறிது நேரம் யோசனை செய்தார். அவருக்கு மிகவும் பிரியமானது அவர் உயிர்தான். அவர் தம் உயிரையே கடவுளுக்குக் கொடுக்கத் தீர்மானித்தார்.

பாபர் தம் மகன் படுத்திருந்த படுக்கையை மூன்று முறை சுற்றி வந்தார்; தம்முடைய உயிரை

ஏற்றுக்கொண்டு, ஹுமாயூனுடைய உயிரைக் காப் பாற்றுமாறு கடவுளை வணங்கினர். அப்பால் ஹு மாயூன் நாளுக்கு நாள் குணம் அடைந்து வந்தார். பாபரின் தேக சுகம் குறைந்து கொண்டே வந்தது. கடைசியில் பாபர் இறந்தார். ஹுமாயூன் சுகம் பெற்று எழுந்தார். பாபர் தம் மகன் மீது வைத் திருந்த அன்பைப் பாருங்கள்!

கேள்விகள்

1. பாபர் யார்? அவருடைய குணங்கள் என்ன?
2. அவர் குழந்தையை எவ்வாறு காப்பாற்றினர்?
3. ஹுமாயூன் எவ்வாறு காப்பாற்றப்பட்டார்?

---

## 11. நூர்ஜஹான்

அக்பர் பாபருடைய பேரர். இவர் நீதி தவ ருது அரசாண்டார். இவர் காலத்தில் வங்காளத் தில் ஷேர் ஆப்கன் என்ற ஒருவர் இருந்தார். அவர்மனைவியின் பெயர் மிகிர் உன்னிஸ்ஸா. அவள் அதிக அழகுள்ளவள்; நன்ருய்ப் படித் தவள். அவளே பிற்காலத்தில் நூர்ஜஹான் என் னும் அரசி.

அக்பர் இறந்ததும் அவர் குமாரரான ஜஹாங் கீர் சக்கரவர்த்தியானர். ஷேர் ஆப்கன் ஜஹாங்கீ ருக்கு விரோதமாக நடந்துகொண்டதால் அவரை

ஜஹாங்கீர் ஆட்கள் கொன்றுவிட்டார்கள். ஷேர் ஆப்கன் இறந்த பிறகு மிகிர் உன்னிஸ்ஸா ஆக்ரா நகருக்குப் போய்விட்டாள். அங்கே ஜஹாங்கீர்



ஜஹாங்கீரும் நூர்ஜஹானும்

அவளைச் சந்தித்துப் பேசினர்; தம்மைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டும் என்று கேட்டார். அவள் சம்மதித்தாள். இருவருக்கும் கலியாணம் நடந்தது. கலியாணம் முடிந்தபிறகு அவர் அவளுக்கு நூர்ஜஹான் என்று பெயரிட்டார். 'நூர் ஜஹான்' என்ற வார்த்தைக்கு 'உலக ஜோதி' என்று பொருள்.

நூர்ஜஹான் தானே அரசாங்கக் காரியங்களைக் கவனித்துவந்தாள். ஜஹாங்கீர் வேட்டைக்குப்

போகும்போது நூர்ஜஹானும் கூடவே போவாள். அவள் கணவனுக்குப் பதிலாகத் தானே அரசாங்கத்தை நடத்திவந்தாள்; மக்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்தாள். நூர்ஜஹான் அரசியாக விளங்கினாள். அவள் 15 வருடங்கள் ஆட்சி செய்தாள். மக்களின் குறைகளை நேரில் விசாரிப்பாள். நாணயங்களில் ஜஹாங்கீரின் உருவத்தோடு நூர்ஜஹான் உருவமும் சேர்த்து அச்சிடப்பட்டது.

ஜஹாங்கீர் இறந்த பின் அவரது குமாரர் ஷாஜஹான் பட்டத்துக்கு வந்தார்.

கேள்விகள்

1. ஜஹாங்கீர் யாருடைய குமாரர்?

2. 'நூர்ஜஹான்' என்ற வார்த்தைக்கு அர்த்தம் என்ன?

3. ஜஹாங்கீர் நூர்ஜஹானை எப்பொழுது மணந்து கொண்டார்?

4. நூர்ஜஹானின் குணங்கள் என்ன?

---

## 12. மநு நீதிச் சோழன்

முன் காலத்தில் தென் இந்தியாவில் மூன்று பெரிய இராஜ்யங்கள் இருந்தன. அவை சேர இராஜ்யம், சோழ இராஜ்யம், பாண்டிய இராஜ்யம் என்பன.

சோழ இராஜ்யத்துக்கு ஒரு சமயம் திருவாரூரும், மற்ருெரு சமயம் தஞ்சாவூரும் தலைநகர்களாக இருந்தன. திருவாரூரில் ஆண்ட சோழ அரசர்களுள் மநுநீதிச்சோழர் மிகவும் கீர்த்தி பெற்றவர். அவர் சோழ நாட்டை நீதி தவருமல் ஆண்டு வந்தார்.

அவருடைய அரண்மனையில் ஒரு பெரிய மணி கட்டி இருக்கும். அதற்கு ஆராய்ச்சி மணி என்று பெயர். குடிகள் தங்களுடைய குறைகளை அரசரிடம் தெரிவிக்க விரும்பினுல், அவர்கள் அந்த மணியை அடிக்கவேண்டும். மணிச் சப்தம் கேட்டதும் அரசர் வெளியே வருவார்; விசாரித்து வேண்டிய உதவியைச் செய்வார்.

மநு நீதிச் சோழருக்கு வீதிவிடங்கன் என்ற ஒரே ஒரு மகன் இருந்தான். ஒரு நாள் அவன் கோவிலுக்குப் போகத் தன் தேர்மீது ஏறிச் சென்ருன். அப்போது பசுவின் கன்று ஒன்று எதிரே ஓடிவந்தது. அது தவறித் தேரின் சக்கரத்தில் அகப்பட்டுக்கொண்டு இறந்துவிட்டது. அதைப் பார்த்து வீதிவிடங்கன் மிகவும் துக்கப்பட்டான். உடனே தாய்ப்பசு அரண்மனைக்கு ஓடியது. அங்கே தொங்கிக்கொண்டிருந்த ஆராய்ச்சி மணியின் கயிற்றைக் கொம்பால் ஆட்டி அசைத்தது. மணிஓசை உண்டாயிற்று.

மணி ஓசை அரசர் காதில் பட்டது. அரசர் வெளியே வந்து பசுவைப் பார்த்தார். அதன் கண் களில் நீர் வடிந்தது. அது துன்பத்தோடு நின்றது. அரசர் அதன் துன்பத்துக்குக் காரணம் என்ன என்று யோசித்தார். தன் மந்திரியிடம் பசுவின் துன்பத்துக்குக் காரணம் என்ன என்று விசாரித் தார். மந்திரி நடந்ததை அரசரிடம் தெரிவித்தார்.

அரசர் மிகவும் வருத்தப்பட்டார்; கன்றின் உயிருக்குத் தம் மகன் உயிரைக் கொடுப்பதுதான் நீதி என்ருர். அவர் மந்திரியிடம், 'கன்று இறந்த இடத்தில் என் மகன் வீதிவிடங்கனைக் கிடத்தி, அவன்மீது தேரைச் செலுத்தி வருக' என்ருர். மந்திரி அவ்வாறு செய்யத் துணியவில்லை. அத ஞல் அவர் தற்கொலை செய்துகொண்டு மாண்டார். பிறகு அரசரே கன்று இறந்து கிடக்கும் இடத்துக் குச் சென்ருர். தன் மகன் வீதிவிடங்கனைத் தரை யில் படுக்கவைத்தார். தாமே தேரின்மேல் உட் கார்ந்து வீதிவிடங்கன்மேல் தேரை ஓட்டினுர்; மகன் இறந்தான்.

கடவுள் மநுநீதிச் சோழருடைய நீதியைக் கண்டு மகிழ்ந்தார்; அரசருச்குக் காட்சி அளித்தார்; இறந்துபோன பசுவின் கன்றையும், மந்திரியை யும், வீதிவிடங்கனையும் உயிர் தந்து எழுப்பினுர். மக்கள் மகிழ்ந்தனர்; அரசரை வாழ்த்தினுர்கள்.

கேள்விகள்

1. முன் காலத்தில் தென் இந்தியாவில் இருந்த இராஜ்யங்கள் எவை?

2. மநு நீதிச் சோழர் எந்த நாட்டு அரசர்? அவர் தலைநகரம் எது?

3. வீதிவிடங்கன் செய்த தீமை என்ன?

4. அரசர் செய்த நீதி என்ன?

---

# 13. இராஜ ராஜ சோழன்

தஞ்சாவூரில் ஆண்ட சோழ அரசர்களில் புகழ்பெற்றவர் இராஜ ராஜ சோழர். அவர் தஞ்சாவூரில் ஒரு பெரிய கோவிலைக் கட்டினார். அதற்குப் பிரகதீஸ்வரர் கோவில் என்று பெயர். அந்தக் கோவிலைச் சுற்றி ஒரு பெரிய மதிலை எழுப்பி, ஆழமான ஓர் அகழியும் வெட்டினார். கோவிலுக்கு முன்னால் ஒரு பெரிய நந்தி இருக்கிறது. அது கல்லால் செதுக்கப்பட்டது. அதன் உயரம் 16 அடி அகலம் 12 அடி. கோவிலின் கோபுரம் சுமார் 200 அடி உயரம் உள்ளது. அதன் நிழல் உச்சிவேளையில் பூமியில் படிவதில்லை. அதனால் அக் கோபுரத்துக்கு நிழல்சாயாத கோபுரம் என்று பெயர்.

இராஜ ராஜ சோழர் பிரகதீசுவரர் கோவிலைத் தவிர வேறு பல கோவில்களையும் கட்டினார். அவர்



தஞ்சாவூர்க் கோவில்

நாகப்பட்டினத்தில் ஒரு புத்தர் கோவிலையும் கட்டினார். அவரிடம் பெரிய கப்பற் படை இருந்தது. அவர் ஒரு பெரிய போர் வீரர். அவர் பல நாடுகளை ஜயித்தார். சேர நாடும், பாண்டிய நாடும் அவருக்குக் கீழ்ப்பட்டன. அவர் இலங்கை, மாலத்தீவுகள், லட்சத்தீவுகள் முதலியவைகளையும் ஜயித்தார்.

இராஜ ராஜ சோழர் குடிகளுக்குப் பல நன்மைகள் செய்தார். நாட்டில் கொலை, களவு, கலகம் இல்லாமல் அமைதி நிலவியது. காவிரி நதியில் அவர் ஒரு பெரிய அணை கட்டினர்; பல கால்வாய்களை வெட்டினர். குடிகள் சுகமாக வாழ்ந்தனர்.

கேள்விகள்

1. இராஜராஜ சோழர் யார்?
2. தஞ்சாவூர்க் கோவில் யாரால் கட்டப்பட்டது? அதன் சிறப்பு என்ன?
3. அவர் ஜயித்த நாடுகள் எவை?
4. இராஜ ராஜ சோழர் செய்த நன்மைகள் யாவை?

---

## 14. திருமலை நாயக்கர்

சுமார் 500 ஆண்டுகளுக்கு முன் நாயக்க மன்னர்கள் பாண்டிய நாட்டை ஆண்டனர். அவர்களில் திருமலை நாயக்கர் சிறந்தவர். இவர் சுமார் 300 வருடங்களுக்கு முன் மதுரையைத் தலைநகராகக்கொண்டு ஆண்டுவந்தார்.

இவர் தெய்வபக்தி உள்ளவர்; குடிகளிடம் அன்பு உள்ளவர். இவர் குடிகளுக்கு அநேக நன்மைகள் செய்தார். இவர் மதுரையில் ஒரு பெரிய

அரண்மனையைக் கட்டினார். அதற்குத் திருமலை



மஹால்

நாயக்கர் மஹால் என்று பெயர். அது பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கிறது. அதற்கு இணையான கட்டிடம் தென் இந்தியாவிலேயே இல்லை என்று சொல்லலாம். இப்பொழுது அந்த அரண்மனையில் அரசாங்கக் கச்சேரிகள் இருக்கின்றன.

இவர் மதுரையில் ஒரு தெப்பக்குளம் வெட்டினார். அதற்கு மாரியம்மன் தெப்பக்குளம் என்



தெப்பக்குளம்

றும், வண்டியூர்த் தெப்பக்குளம் என்றும் பெயர். இவர் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலைப் புதுப்பித்தார். கோவிலுக்கு முன்னுள்ள புதுமண்டபமும் இவர் கட்டியதே ஆகும். அதற்குக் கிழக்கில் ஒரு கோபுரம் கட்டினார். அதற்கு 'ராயர் கோபுரம்' என்று பெயர். இவர் கட்டிடங்கள்கட்டுவதில் அதிக ஆசை உள்ளவர்.

இவையே அன்றி ஸ்ரீவில்லிபுத்தூர், அழகர் கோவில், திருப்பரங்குன்றம் முதலிய இடங்களி லும் இவர் பல கட்டிடங்கள் கட்டியிருக்கிறார். இவர் 36 வருடங்கள் அரசாண்டார்.

கேள்விகள்

1. திருமலை நாயக்கர் எந்த வம்சத்து அரசர்?
2. அவர் மதுரையில் கட்டிய கட்டிடங்கள் எவை?
3. 'ராயர் கோபுரம்' என்பது எது?

---

## 15. சென்னப்ப நாயக்கரும் தென்கரைக் கோட்டையும்

சேலம் ஜில்லாவில் அரூர் என்பது அரூர் தாலூகாவின் தலைநகர். அரூர் தாலூகாவில் பல நதிகள் பாய்கின்றன. அவற்றுள் ஒன்று ஜல கண்டா நதி. இந்த நதியின் தென்கரையின் மேல் ஒரு கிராமம் இருக்கிறது. அதன் பெயர் தென்கரைக் கோட்டை. அது அரூரிலிருந்து சுமார் 8 மைல் தொலைவில் இருக்கிறது. தென் கரைக் கோட்டையில் திரௌபதி அம்மன் கோவி லும் ஒரு கோட்டையும் இருக்கின்றன. கோட் டையின் பரப்பு சுமார் நாற்பது ஏக்கர். கோட் டைக்குள் ஒரு சிவன் கோவிலும், ஒரு விஷ்ணு கோவிலும் உண்டு. அங்கு ஆயுதசாலை ஒன்றும்

இராணி நீராடு மண்டபமும் இருந்தன. நீராடு மண்டபத்திற்கு ஆற்றிலிருந்து கால்வாய் வழியாக நீர் கொண்டுவரப்பட்டது. கோட்டையைச் சுற்றிலும் ஆழமான அகழி இருக்கிறது. கோட்டைக்கு வெளியே பல வீடுகள் இருக்கின்றன. இன்று இது ஒரு சிறு கிராமமாக இருக்கிறது.

அக் கோட்டையின் சுவர்கள் சுமார் 30 அடி உயரமும், சுமார் 15 அடி அகலமும் உள்ளவை. இப்பொழுது அகழி தூர்ந்துபோய் இருக்கிறது. இக் கோட்டை சரித்திர சம்பந்தமானது. கோட்டையின் பழைய சின்னங்கள் யாவும் இருக்கின்றன. இந்த ஊர் எப்படி உண்டாயிற்று? அக் கதை பின்வருமாறு:

ஒரு காலத்தில் சென்னப்பநாயக்கர் என்பவர் சேலத்தை ஆண்டுவந்தார். அவர் ஒரு சமயம் வேட்டைக்குச் சென்றார்; காட்டில் தம் ஆட்களோடு தங்கினர் அப்பொழுது அவரது நாய்கள் ஒரு முயலைத் துரத்திச்சென்றன. அதை நினைத்துக்கொண்டே அவர் தூங்கினர். அப்பொழுது அவர் கனவில் இராமர் தோன்றினர்; அவ்விடத்தில் புதையல் இருப்பதாகச் சொன்னர்; அந்தப் பணத்தைக்கொண்டு ஒரு கோவிலையும், ஒரு கோட்டையையும் கட்டும்படி சொன்னர். பிறகு அவர் மறைந்துபோனர்.

அடுத்த நாள் சென்னப்ப நாயக்கர் தம் ஆட்களை விட்டுப் பூமியைத் தோண்டினர். அங்கே புதையல் கிடைத்தது. சென்னப்பருக்கு ஒரு தம்பி இருந்தார். சென்னப்பர் கூடவே தம்பியும் சென்றிருந்தார். அவர் தம் தம்பியிடம் அப்புதையலைக் கொடுத்தார்; ஒரு கோட்டையையும், ஒரு கோவிலையும், சில வீடுகளையும் கட்டும்படிச் சொன்னர். பின்பு சென்னப்பர் சேலம் போய்விட்டார். அண்ணன் சொல்லியபடியே தம்பி எல்லாம் கட்டி முடித்தார். இதற்குள் யாரோ ஒருவன் சென்னப்ப நாயக்கருக்கு 'தம்பி கோட்டை, ஆலயம் ஒன்றும் கட்டாமல் வீணுகப் பொருளைச் செலவு செய்கிருன்' என்று எழுதினன். அதன் உண்மையை அறியச் சென்னப்பர் தென்கரைக் கோட்டைக்கு அருகில் வந்து தங்கினர். அதை அறிந்த தம்பி அண்ணனைக் காணப் போனர். அவரது பகைவர்கள் அவன் சென்னப்பரைக் கொல்ல வருகிருன் என்று சொன்னர்கள். சென்னப்பர் அதனை நம்பினர். தம்பியைக் கொல்லும்படி கட்டளை இட்டார். உடனே தம்பி கொல்லப்பட்டார்.

பிறகு சென்னப்பர் தென்கரைக் கோட்டைக்கு வந்தார்; தம்பி தம் கட்டளைப்படி எல்லாம் கட்டி முடித்திருப்பதைக் கண்டார்; தம் தம்பியைக் கொன்றதற்காக மிகவும் விசனப்பட்டார்; பின்பு தாமும் தற்கொலை செய்து கொண்டு இறந்தார்.

கேள்விகள்

1. தென்கரைக்கோட்டை எங்கே இருக்கிறது?

2. சென்னப்ப நாயக்கர் யார்?

3. அவர் கண்ட கனவு என்ன? தம்பியிடம் என்ன சொன்னார்?

4. தம்பியை அவர் ஏன் கொல்லும்படி உத்திர விட்டார்?

5. அவர் ஏன் தற்கொலை செய்துகொண்டார்?

---

## 16. இளங்கோவடிகள்

சுமார் 1800 வருடங்களுக்கு முன் நெடுஞ் சேரலாதன் என்ற அரசன் சேரநாட்டை ஆண்டு வந்தான். அதன் தலை நகரம் வஞ்சி. அவனுக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். மூத்தவன் பெயர் சேங்குட்டுவன், இளையவன் பெயர் இளங் கோ. இருவரும் கல்விகற்று அறிவிலும் ஒழுக்கத் திலும் சிறந்து விளங்கினார்கள்.

ஒரு நாள் இருவரும் தந்தையோடு அரச சபையில் வீற்றிருந்தார்கள். அப்போது சோதி டன் ஒருவன் அங்கு வந்தான். அவன் இரண்டு பிள்ளைகளையும் உற்றுப் பார்த்தான். பிறகு அவன் அரசனைப் பார்த்து, 'அரசர்க்குரிய அமைப்பு இளங்கோவிடத்தே அமைந்திருக்கிறது' என்று சொன்னான். அதைக் கேட்டதும் செங்குட்டுவன்

முகம் வாடியது. இளங்கோ அண்ணனைப் பார்த்தார். உடனே சோதிடனிடம், 'மூத்தவன் இருக்க



இளங்கோவடிகள் துறவியாதல்

இளையவன் பட்டம் பெறுதல் முறை அன்று. என் அண்ணன் வீரத்தில் சிறந்தவன். அவன் இருக்க நான் அரசு ஆளுதல் நீதி அன்று' என்று சொன்னார்; 'இன்றுமுதல் நான் துறவி ஆகிவிடுகிறேன்' என்றும் கூறினார். அப்படியே அவர் துறவி ஆனார். தந்தையும் தமையனும் பலவாறு கேட்டுக்கொண்டும் இளங்கோ தம் உறுதியில் மாறவில்லை.

அரசன் இறந்த பிறகு செங்குட்டுவன் பட்டம் பெற்றான். இளங்கோ தம் தமையனுக்குப்

பல வழிகளிலும் உதவி செய்துவந்தார். இளங்கோ சிறந்த தமிழ்ப் புலவர். சிலப்பதிகாரம் என்னும் தமிழ்நூலை அவர் இயற்றினர். இந் நூல் தமிழ் நூல்களில் மிகச் சிறந்தது. இதனை நீங்கள் பெரியவர்கள் ஆனபொழுது படிக்கத் தவருதீர்கள்.

இளங்கோவைப் போல உத்தமனுக இருங்கள்.

கேள்விகள்

1. இளங்கோவின் தந்தை, தமையன் பெயர்கள் என்ன?

2. சோதிடன் என்ன கூறினன்?

3. இளங்கோ கூறிய பதில் என்ன?

4. அவர் எழுதிய நூல் எது?

---

## 17. தலசரித்திரம்

குறிப்பு:—

உங்கள் ஊருக்கு அருகிலுள்ள சரித்திர சம்பந்தமான இடங்களைப் போய்ப் பாருங்கள். அவற்றின் விவரங்களையும் சரித்திர வரலாறுகளையும் பெரியோர்களிடமும் ஆசிரியரிடமும் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

ஆசிரியர்.

---

